பக்கம் விலை 0—1—0

JANASAKTHI
Phone 85777

இலங்கையில் 10 சதம்



# ஜனசக்தி

கம்யூனிஸ்ட் கட்சி தின இதழ்
COMMUNIST TAMIL DAILY

மலர் 8 | சென்னை 9—6—'52 திங்கள் ★ வெளியூர் 10—6—'52 செவ்வாய் | இதழ் 174

## தென் சீனுமீது பிரெஞ்சு விமானத் தாக்குதல்

பீகிங், ஜுன் 5—

தென் சின எல்லையோரப் பிரதேசத்தின் மீது இந்தோ சீனுவிலுள்ள பிரெஞ்சு விமானங்கள் பல தடவை பறந்து குண்டுகள் வீசியதாகவும், யந்திரத் துப்பாக்கியால் சுட்டதாகவும் பீகிங் ரேடியோ பிரெஞ்சு காலனி வெறியர்கள்மீது குற்றம் சாட்டியது. கடந்த 17 மாதங்களில் 286 பிரெஞ்சு விமானங்கள் 193 தடவை பறந்து வேவு பார்த்து குண்டுகள் வீசியிருக்கின்றன. இதனுல் 8 சினமக்கள் கொல்லப்பட்டிருக்கின்றனர்.

# கன்ட்ரோல் ஒழிப்பால் விலை உயர்கிறது

## விலை வாசிகள் ஏறும் என்று அதிகாரிகள் அச்சம்

### உணவு நிலைமைபற்றிய தகவல்கள்

சென்னை, ஜுன் 9—

சென்னை சர்க்காரின் உணவுக் கட்டுப்பாடு நீக்கக் கொள்கை அதன் விஷச்கனிகளை ஈன்ற ஆரம்பித்துவிட்டதை பத்திரிகைச் செய்திகளில் பார்க்கமுடிகிறது.

"மங்களுரில் அரிசி விலை 42 சேர்களுக்கு ரூ 5வீசம் அதிகரிக்கும் என சிலர் அஞ்சுகின்றனர். தற்சமயம் அங்கு ரூ. 2 -க்கு விற்கப்படுகிறது."

"கண்ட்ரோல் நீக்கத்தால் பகிரங்க மார்க்கெட்டில் உடனடியாக அரிசி விலை ஏறும் என்று மதுரையில் அதிகாரிகள் கருதுகின்றனர். சில கிராமங்களில் 48 படி கொண்ட மூட்டை அரிசியின் விலை ரூ 2 வீதம் அதிகரித்துவிட்டதாக கூறப்படுகிறது."

(சுதேசமித்திரன், 8-6-52)

அம்பா சமுத்திரம் வட்டாரத்தில் சென்ற வாரத்தில் ரேஷன் கன்ட்ரோல் முறை ஒழியப்போகிறது என்று வதந்தி உலாவியவுடன் ஒரு கோட்டை நெல் விலை ரூ. 32 ஆக இருந்தது 42 ஆக உயர்ந்துவிட்டது.

பொன்னேரியிலிருந்து சென்னைக்கு முன்பு அரிசி ஏராளமாக வந்து கொண்டிருந்தது. இப்பொழுது திடீரென்று நின்றுவிட்டது. சேமிப்பாளர்கள் சுறுசுறுப்பாக வேலைசெய்ய ஆரம்பித்துவிட்டார்கள்.

தஞ்சாவூரைச் சேர்ந்த ஒரு பெரிய மிராசுதார் (அவருடைய திருநாமத்தை எந்தப்பத்திரிகையும் பிரசுரிக்கவில்லை) கன்ட்ரோல் நீக்கத்தை ஆர்ப்பாட்டத்துடன் வரவேற்றுப் புகழ்ந்துவிட்டுப் பேசுகையில் "சமீபகாலமாக விலைவாசிகள் விழுந்ததால் (கவனிக்க!) அரிசியை சேகரித்து வைக்க முதலீடு செய்வதில் பெரிய வியாபாரிகள் முன்வரவில்லை என்று கூறினுர்" (சுதேசமித்திரன் 8-6-52) இதன் பொருள் என்ன? இனிமேல் ஏராளமாக முதலீடு செய்து அரிசியைக் கைப்பற்றி தங்களுக்கு இஷ்டமான விலையில் அவர்கள் விற்கத் துணிவார்கள் என்பதே.

நிலைமை இவ்வாறு உருவாகிக் கொண்டிருக்கையில் சென்னை தியாகராய நகரில் இதுவரை கள்ளமார்க்கெட் விலை படி ரூ. 1-3-0 ஆக இருந்ததில் இரண்டணு இறங்கியிருக்கிறது என்று கூறி 'தினமணி' பெருமைப்படுகிறது. ரேஷன் அரிசி படி 0-12-0 அணுவாக இருக்கையில் மக்கள் பகிரங்க மார்க்கெட்டில் (நேற்றுவரை கள்ளமார்க்கெட்டாக இருந்தது இது.) ரூ. 1-1-0 க்கு வாங்க வேண்டியிருப்பதைப் பார்த்து தினமணி சந்தோஷப்படுகிறது.

சென்னை ராஜ்யத்தில் கண்ட்ரோலை ஒழித்ததால், அரிசி கிராக்கி நிலைமை ஏற்படும் என்று எதிர்பார்த்து தூரத்திலுள்ள மத்திய பிரதேசத்தைச் சேர்ந்த ஜபல்பூரில் மணங்கு அரிசி விலை இரண்டு ரூபாய் உயர்ந்து விட்டது. ஜபல்பூர் வரை பேராசையின் ஈட்டி பாய்ந்து விட்டது! இந்தப் பெரு மிராசு மொத்த வியாபாரிக் கும்பலுக்குத்தான் "நல்லவர்களாகி விட்டார்கள்" என்று ஆச்சாரியார் நற்சாட்சிப் பத்திரம் வழங்கியுள்ளார்.

## பிரஜா-சோஷலிஸ்ட் ஐக்கியத்திற்கு எதிர்ப்பு

லக்ஷ்மணபுரி ஜுன், 8—

"கம்யூனிஸ்டுகளுடன் கூட்டுறவு வைத்துக் கொள்ளக்கூடாது என்று கிருபளானி கூறும் போக்கு எவ்வாறு காங்கிரசுக்கெதிராக மக்களின் ஒற்றுமையைக் கட்ட உதவாது" என்று கம்யூனிஸ்ட் கட்சி காரியதரிசி தோழர் அஜாய் கோஷ் விடுத்துள்ள அறிக்கையை வேறோரிடத்தில் பிரசுரித்துள்ளோம். ஐ. மாகாணத்தில் பிரஜா கட்சி ஊழியர்களும், கிருபளானியின் இப்போக்கை ஆதரித்தனர்.

லக்ஷ்மணபுரி, ஜுன் 8—

கடந்த இரண்டு நாட்களாக நடைபெற்ற ஐக்ய மாகாண பிரஜா கட்சி மகாநாடு, பிரஜா சோஷலிஸ்ட் ஐக்யம் பற்றிய பிரச்னையில் எவ்வித முடிவும் எடுக்க முடியாமல் கலைந்தது.

மகாநாட்டுக்கு சுமார் 150 பிரதிநிதிகள் வந்திருந்தனர்.

மகாநாட்டுக்கு வந்திருந்தவர்களில் பெரும்பான்மையோர் பிரஜா கட்சியும் சோஷலிஸ்ட் கட்சியும் ஐக்யப்பட்டு சோஷ

(2-ப் பக்கம் பார்க்க)

## "சென்னையில் ரேஷனை ஒழித்த பெருமை எனக்குத்தான்"

### கல்கத்தாவில் கித்வாய் அறிவிப்பு

### இந்திய சர்க்கார் உணவுக் கொள்கைக்கு இது உதாரணமாம்

கல்கத்தா, ஜுன் 8—

"சென்னையிலும், பஞ்சாபிலும் உணவு ரேஷனை எடுக்கலாம் என்று நான்தான் யோசனை கூறினேன். நான் சென்னைக்கு சென்றபொழுது திரு. ராஜகோபாலாச்சாரியாருடன் இதைப்பற்றி பூரணமாக விவாதம் செய்தேன். அவர் ஒப்புக்கொண்டார். ஆனுல் உணவு ரேஷனை எடுக்க பஞ்சாப் சர்க்கார் மறுத்துவிட்டார்கள்' என மத்திய சர்க்கார் உணவு மந்திரி கித்வாய் இங்கு பேசுகையில் குறிப்பிட்டு தனக்கு 'பெருமை' தேடிக கொண்டார்.

"படிப்படியாக உணவுக் கட்டுப்பாடுகளை தளர்த்த வேண்டுமென்ற இந்திய சர்க்காரின் புதிய உணவுக் கொள்கைக்கு சென்னை உதாரணமாக விளங்குகிறது" என அவர் மேலும் கூறினுர்.

"பதுக்கல்காரர்கள் மீதும், திருட்டுத்தனமாக உணவு தானயத்தைக் கடத்திச் செல்லுவோர் மீதும் சரியான கண்காணிப்பு வைக்கப்படுமானுல், சென்னையில் உணவு ரேஷன் ஒழிப்பு திட்டம் தோற்பதற்குக் காரணமேயில்லை" என கித்வாய் பிரகடனம் செய்தார்.

கள்ள மார்க்கெட்காரர்கள் மீதும் பதுக்கல் கொள்ளையர் மீதும் சரியான கண்காணிப்பு வைப்போம், அவர்களைக் கழுவிலேற்றுவோம் என வாய்கிழியக் கத்திய காங்கிரஸ் தலைவர்களால் அதை ஒருக்காலும் அமுல் நடத்த முடிந்ததில்லை. அமுல் நடத்தவும் அவர்கள் விரும்பியதில்லை. 1948ல் ஒரு தடவை இதை சோதனைசெய்து பார்த்தாகிவிட்டது. "சரியான கணகாணிப்பிருந்தால் சென்னை சர்க்கார் திட்டம் தோற்காது" என கித்வாய் சரடு விடுகிருர்.

மேற்கு வங்கத்திலும், பம்பாயிலும், உணவு ரேஷனை ஒழிக்க முடியாது, ஏனெனில் இந்த ராஜ்யங்களில் பற்றுக்குறை பிரதேசங்கள் இருக்கின்றன என கித்வாய் அறிவித்திருக்கிருர்.

சென்னை ராஜ்யத்தில் பற்றுக்குறையே கிடையாது போலும்! எங்கும் சுபிட்சம்தான் பொங்கு

(2-ம் பக்கம் பார்க்க)

## ஆச்சார்ய கிருபளானியின் போக்கு

### ஜனநாயக ஒற்றுமையைக் கட்ட உதவாது

### தோழர் அஜாய்கோஷ் அறிக்கை

புதுடில்லி, ஜுன் 8—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி தோழர் அஜாய்கோஷ் பத்திரிகைகளுக்குப் பின்வரும் அறிக்கையை விடுத்துள்ளார்:

"பிரஜாகட்சியும், சோஷலிஸ்ட் கட்சியும் ஒன்று சேர்வதைப் பற்றி பத்திரிகைகளில் வெளிவந்த செய்திகளை ஊர்ஜிதம் செய்து ஆச்சாரிய கிருபளானி ஐக்கிய மாகாண பிரஜா கட்சி ஊழியர்கள் கூட்டத்தில் பேசுகையில், கம்யூனிஸத்தையும், வகுப்புவாதத்தையும் ஒரே அளவில் வைத்துக் கண்டித்தார். இந்த இரண்டுடனும் எவவித உறவும் கூடாது என்றுர்.

இன்று காங்கிரசுக்கெதிராகமிகவும் பலம் பொருந்திய எதிர்க்கட்சியாக உள்ள கம்யூனிஸ்ட் கட்சியின்பால் இத்தகைய ஒரு போக்கை அனுஷ்டிப்பது, நம்முடைய ஜனங்கள் விரும்பக்கூடிய ஜனநாயக ஒற்றுமையைக் கட்டுவதற்கு உதவாது.

கடந்த சில மாதங்களில் ஆந்திராவிலும் மலபாரிலும் இன்னும் இதர இடங்களிலும் ஏற்பட்ட சம்பவங்கள், எவ்வாறு ஆளும் வர்க்கத்தினர் கம்யூனிஸ எதிர்ப்பு என்ற ஆயுதத்தை ஜனநாயக இயக்கத்திற்கெதிராக உபயோகித்து வருகிருர்கள் என்பதை தெளிவாக்குகிறது. ஆகவே கம்யூனிஸ்ட்கள் உட்பட எல்லா முற்போக்கு சக்திகளும் ஒன்றுபட்ட ஐக்ய முன்னணியால் மட்டுமே காங்கிரஸை எதிர்த்து வெற்றி கரமாகப் போராடமுடியும்.

ஸ்ரீமான் கிருபளானி அனுபவத்தின் படிப்பினைகளை உணராததும், காங்கிரஸ் மீண்டும் பதவிக்கு வருவதற்கு உதவி செய்த கொள்கைகளை அனுஷ்டித்த சோஷலிஸ்ட் தலைவர்களைப் பின்பற்றி செல்வதும் மிகவும் வருந்த வேண்டிய விஷயமே.

சட்டசபைக்கு வெளியிலும், உள்ளேயும் மக்களுக்கு பயன் தரத்தக்க முறையில் சேவை செய்வதற்காக, எல்லா முற்போக்கு கட்சிகளையும், நபர்களையும் ஒன்று திரட்டுவதற்கு கம்யூனிஸ்ட் கட்சி முயற்சி செய்து வருகிறது. அந்தப் பணியைத் தொடர்ந்து நடத்திவரும். இப்பணியில் வெற்றி யடைவோம் என்று எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது. ஏனெனில் மக்கள் ஒற்றுமையை விரும்புகிருர்கள். ஒற்றுமை வேண்டுமென்று கோருகின்றனர்.

## "இன்னும் பல கொரியாக்கள் ஏற்படும்"

—ட்ரூமன்

ஸ்பிரிங்பீல்ட் (மிசௌரி), ஜுன். 7—

இன்று, மாஜி பட்டாளத்தார்களிடையே பேசும்பொழுது, உலகில் இன்னும் பேரபாயம் நிகழக் காத்துக் கொண்டிருக்கிறது என்றும், பல புதிய கொரியாக்கள் ஏற்படலாமென்றும் ஜனுதிபதி ட்ரூமன் கூறியுள்ளார். 'கொரியாவில் ஒரு புதிய தாக்குதல் ஏற்பட்டாலும் ஏற்படலாம்' என்று அவர் கூறினுர்.

கொரியாவிலும், ஆசியாவின் இதர பாகங்களிலும் கம்யூனிஸ்ட்கள் தங்கள் படையைத் திரட்டி வருகிருர்களெனவும், ஐரோப்பாவில், பெர்லினை ருஷ்யர்கள் பயமுறுத்திக் கொண்டிருக்கிருர்களென்றும், பாரிசிலிருந்து டோக்கியோவரை கம்யூனிஸ்டுகள் கலகத்தைக் கிளப்பி விடுகிருர்களென்றும் இந்த அணுகுண்டுகொக்கு அங்கலாய்த்துக்கொள்கிறது.

## நேபாள சர்க்கார் ஊழியர்கள் ஸ்ட்ரைக் பரிபூரண வெற்றி!

### 15லிருந்து 131சத விகிதம் சம்பள உயர்வு!

காட்மண்டு, ஜுன் 8—

சம்பள உயர்வு கோரி ஜுன் முதல் தேதியிலிருந்து வேலைநிறுத்தம் செய்து வந்த நேபாள சர்க்கார் ஊழியர் மகத்தான வெற்றிபெற்றுள்ளார்கள்.

பியூன்களும், ஆர்டர்லிகளும் தஙகள சமபளத்தில் 113 சதவிகிதம் அதிகம் பெறுவார்கள். ஜுனியர் குமாஸ்தாக்களுக்கு 131 சதவிகித உயர்வும், சீனியர் குமாஸ்தாக்களுக்கு 33 லிருந்து 84 சத விகித உயர்வும், ஆபீசர்களுக்கு 15 லிருந்து 36 சதவிகித உயர்வும் கிடைத்துள்ளது.

இந்த சம்பள உயர்வு 1952 ஜனவரி முதல் தேதியிலிருந்து அமுலுக்குக் கொணடுவரப்பட்டிருக்கிறது. இதனுல் ஒவ்வொரு சர்க்கார் சிப்பந்தியும் கடந்தஐந்து மாதகால சம்பளபாக்கித்தொகையை மொத்தமாகப் பெறுவார்.

இந்த வேலைநிறுத்தத்தை உடைத்துவிட நேபாள சர்க்கார் தன்னுல் ஆனவரை முயன்றது. பயங்கர அடக்குமுறையை ஏவி விட்டது. ஆனுல் வேலை நிறுத்தத்திற்கு ஆதரவாக மக்களின் சகல பகுதியினரும் ஒன்றுதிரண்டனர். ஆயிரக் கணக்கான மாணவர்கள் தடையுத்தரவையும் மீறி ஆர்ப்பாட்டம் செய்து ரத்தம் சிந்தியது வாசகர்கள் அறிந்ததே.

நேபாள ஜனநாயக சக்திகளின் ஒப்பற்ற வெற்றியாகும் இது. பிற்போக்கு நிலப்பிரபுத்துவ கொய்ராலா சர்க்காரின் படு தோல்வி இது.

ஜனசக்தி

திங்கட்கிழமை 9-6-1952

# நெசவுத்தொழில் நெருக்கடி

"குடிசைத் தொழில்களைப் பற்றிய சர்க்காரின் கொள்கை என்ன?" என்று கோவையில் மத்திய சர்க்காரின் வர்த்தக, தொழில் மந்திரியான டி. டி. கிருஷ்ணமாச்சாரியிடம் ஒரு கேள்வி கேட்கப்பட்டது.

"சர்க்கார் இந்தத் துறையில் இதுவரையில் ஒன்றும் செய்யவில்லை. இது மிகப்பெரிய பிரச்னை. குடிசைத் தொழிலைப்பற்றிய ஒரு தத்துவ ஞானத்தைப் பொதுமக்களிடம் உருவாக்கியாகவேண்டும்" என்று பதில் சொன்னார் அவர்.

"ஒன்றும் செய்யவில்லை" என்று மந்திரியார் சொல்வது பச்சைப் பொய். காங்கிரஸ் சர்க்கார் இந்தத் துறையில் மறக்க முடியாத சில பல செய்திருக்கிறார்கள். புறக்கணித்தும் காட்டிக்கொடுத்தும் குடிசைத் தொழில்களை ஈவிரக்கமின்றி அழித்து எருக்கும் குருக்கும் விதைத்திருக்கிறார்கள்.

குடிசைத் தொழில்களை வளர்ப்பதில் கிருஷ்ணமாச்சாரி தனிக் கவனம் செலுத்தப்போகிறாராம்! இதில் ஏதாவது செய்து தீரவேண்டுமென்று நேரு தவியாய்த் தவிக்கிறாராம்!

150 ஆண்டுகளாக பிரிட்டிஷ் ஏகாதிபத்திய வெறியர்கள் கைத்தறி நெசவை அழித்து விட தலைகீழாக நின்று பார்த்தார்கள். உள்நாட்டு மில்களும், திமுதிமுத்து எழுந்து கைத்தறிகளை குப்பைமேட்டுக்கு ஓட்டிவிட முயன்றன. இந்தக் கொடிய போட்டிகளுக்கெல்லாம் தாக்குப் பிடித்து நின்று வந்திருக்கிறது நெசவுத் தொழில். ஆனால், அது சென்ற ஐந்து ஆண்டுக் காங்கிரஸ் ஆட்சியில் பயங்கரமான சீரழிவை அடைந்திருக்கிறது.

ஏன் இவ்வாறு அழிந்தது? பொதுமக்கள் வர வர பாப்பரிலும் பாப்பராகி வருவதோடு அவர்களுடைய வாங்கும் சக்தியும் அதள பாதாளத்திற்குப் போய்க்கொண்டிருக்கிறது. மானத்தை மறைக்க துணி வாங்க வக்குமில்லை வழியுமில்லை. நெசவாளர்க்கு நூல் கிடைப்பதில்லை. நூல் விலை ஏணி வைத்தாலும் எட்டிப்பிடிக்க முடியாதபடி ஏறிக்கொண்டே போகிறது. 46ல் 16 ரூபாய்க்கு வாங்கிய நூலின் விலை படிப்படியாக ஏறி இன்று யேறி 43 ரூபாயாக உயர்ந்திருக்கிறது. பகீரதப் பிரயத்தனம் செய்தால்தான மாதத்தில் பத்து நாளைக்காவது நூல் கிடைக்கும். அதற்கும் கள்ளச் சந்தையில் அடைக்கலம் புகுந்தாகவேண்டும்.

ஆதலால் நெருக்கடியின் பயங்கரம் விசுவரூபமெடுத்திருக்கிறது. உற்பத்தி செய்யமுடியவில்லை, விற்பனை செய்யமுடியவில்லை, வாங்கவும் முடியவில்லை. கைத்தொழிலில் ஒரே தேக்கமும், சீரழிவும். சமீபத்தில் கூடிய கமிட்டியின் கணக்குப்படி, கூட்டுறவுக் கழகங்களில் மட்டும், ஏப்ரல் முதல் தேதியன்று ஒரு கோடி ரூபாய் பெறுமானமுள்ள துணி தேங்கிக் கிடந்ததென்றும் மே முதல் தேதியன்று இரண்டு கோடி ரூபாய் பெறுமானமுள்ள துணி தேங்கிக் கிடந்ததென்றும் தெரியவருகிறது. இன்று சென்னை இராச்சியம் முழுவதிலும் தனிநபர்களிடமும், கம்பெனிகளிடமும் கூட்டுறவுக் கழகங்களிடமும் விற்பனையாகாமல் தேங்கிக் கிடக்கும் துணி ஏறத்தாழ பத்துக் கோடி இருக்கும் என்று நிச்சயமாகச் சொல்லலாம்.

இந்த நெருக்கடி தீரவேண்டுமானால், தேங்கிக் கிடக்கும் சரக்கு உடனடியாக விற்பனையாவதற்கு வழி செய்தாக வேண்டும். கூட்டுறவுச் சங்க ரிஜிஸ்திரார் உடனே 50 லட்சம் ரூபாய் சர்க்கார் கடன் கொடுக்க வேண்டுமென்று கோருகிறார். இந்தக் கோரிக்கை நிறைவேறினால், கூட்டுறவுக் கழகத்தைச் சார்ந்த தொழிலாளர்களுக்கு இன்னும் கொஞ்ச காலத்திற்கு குறைந்தபட்ச வேலை கிடைக்குமேயன்றி இன்றைய நெசவு ஜவுளியின் பயங்கரத் தேக்கத்தை உடைக்க உதவாது. தேங்கிக் கிடக்கும் துணிகளையெல்லாம் குறைந்த விலைக்கு விற்க ஏற்பாடு செய்து, அதில் வரும் நஷ்டத்தை சர்க்கார் பொறுத்துக் கொள்ள வேண்டும்.

1949–50-ல் அமெரிக்கப் பஞ்சின் விலையேற்றத்தால் மில்லை மூடப்போகிறேன் என்ற ஹார்விக்கு 1 கோடி ரூபாய் மத்திய சர்க்கார் மானியம் கொடுத்தது. வெள்ளை முதலாளிக்கு உதவி மான்யம் கொடுக்க முந்துகிற காங்கிரஸ் சர்க்கார், 5 லட்சம் தறிகாரர்களின் குடும்பங்கள் வாழ, பொதுமக்களின் துணிப் பஞ்சம் தீர, நம் நாட்டின் அருமந்தன்ன கைத்தறித் தொழில் புத்துயிர் பெற்றுத் தழைக்க, உதவி மான்யம் கொடுக்க கடமைப்பட்டிருக்கிறது.

மேலும் சர்க்காருடைய 5 வருட கொள்கையால்தான் மக்களின் வாங்கும் சக்திக் குறைவும், கைத்தறித்தொழில் சீரழிவோடு, பயங்கரத் தேக்கமும் ஏற்பட்டிருக்கிறது. இதன் காரணமாகவும் சர்க்கார் உதவி மான்யம் கொடுக்கக் கடமைப்பட்டிருக்கிறது என்று இடித்துக்கூற விரும்புகிறோம். இதைவிட்டு விட்டு, குடிசைத் தொழிலைக் காப்பாற்றப் புதிய தத்துவ ஞானத்தை உருவாக்கப் போகிறோம் என்பது கேலிக்கூத்தே.

# ஆமதாபாத் உபதேர்தல் காட்டுவதென்ன?

## தோழர் அஜாய்கோஷ் அறிக்கை

ஆமதாபாத், ஜூன் 8—

இந்தியக் கம்யூனிஸ்ட் கட்சியின் பொதுக்காரியதரிசி அஜாய் கோஷ் ஆமதாபாத் உபதேர்தலைப்பற்றி வெளியிட்டுள்ள ஒரு அறிக்கையில், "பொதுத்தேர்தலில் தோல்வியடைந்த பம்பாய் பிரதமர் மொரார்ஜிதேசாய், உபதேர்தலில் மிகவும் குறைந்த மெஜாரிட்டியில் வெற்றியடைந்திருப்பது, நாட்டின் சகல பகுதிகளிலும் காங்கிரஸின்பால் மக்களின் வெறுப்பு அதிகரிப்பதையே குறிப்பிடுகிறது" என்கிறார்.

"இந்தியாவின் எந்த தொகுதியிலும் காங்கிரஸ் பெரிய மெஜாரிட்டியுடன் ஜெயிக்கமுடியாது என்பது தெளிவாகிவிட்டது; ஆமதாபாத் உபதேர்தல் முடிவு காங்கிரசுக்கு ஏற்பட்டுள்ள பேரிடியாகும், அரசியல் ரீதியிலும், தார்மீக ரீதியிலும் காங்கிரஸ் படுதோல்வி அடைந்துவிட்டதையே இது சுட்டிக் காட்டுகிறது" என்று தோழர் அஜாய் மேலும் குறிப்பிடுகிறார்.

ஆமதாபாத் உப தேர்தலில் கம்யூனிஸ்ட் அபேட்சகர் தினகர் மேத்தாவுக்கு 11 ஆயிரத்திற்கு மேற்பட்ட ஓட்டுகளும், மொரார்ஜி தேசாய்க்கு 17 ஆயிரம் ஓட்டுகளும் கிடைத்தன.

# சி. ஏ. பாலன்மீது கருணை காட்டுக

## பி. ஆர்., ஜீவா உருக்கமான வேண்டுகோள்

சென்னை, ஜூன் 8—

நேற்றுமாலை சென்னை, திருவல்லிக்கேணி கடற்கரையில் கம்யூனிஸ்ட் கட்சி சென்னை ஜில்லாக் கமிட்டியின் சார்பில் தோழர் ஏ. எஸ். கே. அய்யங்கார் தலைமையில் ஒரு மாபெரும் பொதுக்கூட்டம் நடைபெற்றது. 10 ஆயிரத்திற்கு மேற்பட்ட மக்கள் கூடியிருந்தனர். கோவை தொழிலாளிகளின் இன்னுயிர்த் தலைவர் சி. ஏ. பாலன்மீது விதிக்கப்பட்டுள்ள மரண தண்டனையை ரத்துசெய்ய வேண்டுமென்று ஜனாதிபதி ராஜேந்திர பிரசாத், பிரதம மந்திரி நேரு, முதலமைச்சர் ராஜாஜி ஆகியோரைக் கேட்டுக்கொள்வதென்று தோழர் ஜானகிராம் ஒரு தீர்மானத்தைப் பிரரேபித்தார். அதை ஆதரித்து, ஆவேசமாகவும், மிக உருக்கமாகவும் தோழர்கள் பி. ராமமூர்த்தியும், ஜீவானந்தமும் பேசினர்.

பாலன்மீது வேண்டுமென்றே இந்த வழக்கு ஜோடிக்கப்பட்டுள்ளது என்றும், பாலன் உயிரைக் காப்பாற்றுவதற்காக, சகல மக்களும் தந்திகளும், விண்ணப்பங்களும் ஜனாதிபதியிடம் குவியும்படி செய்யவேண்டுமென்றும் தோழர் ஏ. எஸ். கே. கேட்டுக்கொண்டார்.

அடுத்துப்பேசிய தோழர் பி. ராமமூர்த்தி, எம். எல். ஏ. அரசியல்பழிவாங்குவதற்காக தோழர் பாலனமீது விதிக்கப்பட்டுள்ள மரண தண்டனையை ரத்துசெய்ய வேண்டுமென்று கம்யூனிஸ்ட் கட்சி கூறினால் அதைத் திரித்துப் புரட்டி, கம்யூனிஸ்ட்கள் பலாத்காரவாதிகள் என்று சில நேர்மையற்ற காங்கிரஸ்வாதிகள் புளுகு பிரச்சாரம் செய்து வருவதை வன்மையாகக் கண்டித்தார். காசிராஜன், ராஜகோபாலன் மரணதண்டனையை ரத்து செய்ய வேண்டுமென்று, அன்று பிரிட்டிஷ் அரசாங்கத்திடம் ராஜாஜியும், மற்றும் காங்கிரஸ் தலைவர்களும் சொன்னார்களே; அப்படியானால் காங்கிரசும் ஒரு பலாத்கார, கொலைகாரக் கட்சிதானே என்று எதிர்க்கேள்வி கேட்டார்.

பின்னர் சென்னை ராஜ்யத்தில் ரேஷன் ஒழிப்பையும், புது உணவுக் கொள்கையையும் பற்றிக் குறிப்பிடும்போது, இது ராஜகோபாலாச்சாரியின் மகத்தான சாதனை என்று கூறி காங்கிரஸ் வட்டாரங்கள் கும்மாளமடிக்கின்றன; ஆனால் இது வெறும் கண் துடைப்பு வேலையாகும். கடந்த 5 வருடகாலமாக மக்கள் பட்டத் துயரையும், தங்களது உணவுக் கொள்கை தோற்றுவிட்டதையும் மூடிமறைக்கும் வேலையே இந்த அபாயகரமான நடவடிக்கை. யார் வேண்டுமானாலும், எவ்வளவு வேண்டுமானாலும் தாராளமாக என்ன விலைக்கும் அரிசி விற்கலாம் என்று ஆச்சாரியார் கூறியுள்ளது, ராமநாதபுரம் ராஜா, தருமபுரம், திருப்பனந்தாள்மடங்கள் பெரும் நிலத்திமிங்கலங்கள் நெல்லில் கொள்ளைலாபமடிப்பதற்கே ஆதரவளிப்பதாகும். ரேஷன் ஒழிப்பு வெற்றி பெறுவிட்டால், தன்னையே அது பாதிக்கும் என்று ஆச்சாரியார் கூறுகிறார். ஆனால் உண்மையில் இது அவரைப் பாதிக்கும் பிரச்சினையல்ல, சென்னை ராஜ்யத்திலுள்ள 4 கோடி மக்களையும் பாதிக்கும் ஜீவப் பிரச்சினையாகும் என்று ஆவேசத்துடன் கூறினார்.

2,000 கம்யூனிஸ்ட்களைக் கொண்ட தமிழ் நாட்டிலுள்ள எங்கள் கட்சியை ஒடுக்கிவிட 2½ கோடி ரூபாய் போலீஸ் செலவை 7½ கோடியாக உயர்த்தியும், ஐ.ஜ.மு.வை எதிர்க்கட்சியாக தான் அங்கீகரிக்கவில்லையென்று ஆச்சாரியார் திமிருடன் கூறியிருப்பது, பொதுமக்களை அவமதிப்பதாகும் என்று கூறி இதற்கு பொதுமக்கள்தான் தக்க பதில் கூறவேண்டுமென்றும் பேசி முடித்தார்.

அடுத்து தோழர் ஜீவா பேசுகையில், எமன் வாயில் அகப்பட்டு நிற்கும் தோழர் சி. ஏ. பாலனை, இனி மக்களின் கருணை பிரவாகம்தான் காப்பாற்ற முடியும் என்றும், கருணை காட்டுமாறு தந்திகளும், மகஜர்களும் ஜனாதிபதிக்கு ஆயிரக் கணக்கில் அனுப்பவேண்டுமென்றும், எப்படியும் செங்கொடி உரம்பெற்ற தீரன் பாலன் உயிரைக் காக்க முன்வர வேண்டுமென்று உருக்கமாக வேண்டிக் கொண்டார்.

கடவுள்தான் நாட்டை ஆள்கிறார் என்று சமீபத்தில் ராஜாஜி கூறினார். போலீஸ் இலாகாவையும் கடவுள் இலாகாவாக பாவித்துவிட்டார் போலும் ஆச்சாரியார். அப்படியானால் எமன் இலாகாவையும் சேர்த்து ஆச்சாரியார் நிர்வகித்து வருகிறார் என்றுதானே அர்த்தம். குரோதமும் பழிவாங்கும் வெறி எண்ணமும் இன்றி, உறுதியான அரசியல் எதிர்க்கட்சி என்ற காரணத்திற்காக வஞ்சம் தீர்க்கும் வகையில் பாலனைத் தூக்கிலேற்ற வேண்டாம், என்று கெஞ்சி, பாலன் உயிரை கருணை சுரந்து காப்பாற்றும்படி அதிகார பீடத்திலுள்ள காங்கிரஸ் தலைவர்களை மனமுருகக் கேட்டுக் கொண்டார்.

தோழர் கே. பி. ஆர். கோபாலனையும், தெலிங்கானா 12 வீரப் புதல்வர்களையும் காப்பாற்றிய ஜனசக்தி சி. ஏ. பாலன் உயிரைக் காப்பாற்றவும் திரண்டெழ வேண்டுமென்று வேண்டிக் கொண்டார்.

# இந்தியை திணிப்பதைப்பற்றி

## டாக்டர் ராதாகிருஷ்ணன் ஆலோசனை

புதுடில்லி, ஜூன் 8—

இந்திய குடியரசின் உதவி ஜனாதிபதி டாக்டர் ராதாகிருஷ்ணன், பார்லிமெண்ட் இந்தி சங்கத்தினர் ஆரம்பித்துள்ள இந்தி வகுப்பைத் திறந்து வைத்துப் பேசிய பொழுது, இந்தியைப் பரப்புவதில் துடிதுடிப்புக் கொண்டுள்ளவர்களுக்கு ஒரு அரிய ஆலோசனை கூறியுள்ளார்.

"பார்லிமெண்டில் விவாதிக்கப்படும் ஒவ்வொரு விஷயமும், சகல மெம்பர்களும் முழுவதும் புரிந்து கொள்ளும்படியானவிதத்தில் இருக்கவேண்டும். அங்கு ஒரு விஷயத்தின் மீது நடக்கும் விவாதங்கள் முழுவதையும் அப்படியே சில மெம்பர்களோ, அல்லது பெரும்பாலானவர்களோ புரிந்துகொள்ள முடியாதபடி இருக்குமானால், அதனால் அந்த விவாதத்தினால் ஒரு பயனும் ஏற்படாது. அதனால் எல்லோருக்கும் தெரிந்த ஒரு மொழியைப் பரப்புவது நமது நோக்கமாயிருக்க வேண்டியது அவசியந்தான். அதற்காக, இந்தி தெரியாத மக்கள் மீது, இந்தியைத் திணிப்பதென்பது அவர்களது நோக்கமாக இருக்கவே கூடாது. இந்தியை அவர்கள் திணித்தால் அதனால் ஆத்திரமும், எரிச்சலும்தான் விளையுமே தவிர, அவர்களது நோக்கத்தைப் பூர்த்திசெய்யாது என எச்சரித்தார்.

## பிரஜா-சோஷலிஸ்ட் . .

(முதற்பக்கத் தொடர்ச்சி)

லிஸ்ட் பிரஜா கட்சியாக மாற்றப்படுவதை எதிர்த்தார்கள் என்று தெரிகிறது.

மேலும், எதிர்காலத்தில், எந்தப் பொதுவான பிரச்னையிலும், கம்யூனிஸ்டுகளுடனோ அல்லது இதர எந்த அரசியல் கட்சியுடனோ கூட்டுறவு ஏற்படுத்திக்கொள்ளும் உரிமை நம் கட்சிக்கு இருக்க வேண்டும் என்று ஒரு பகுதியினர் அபிப்ராயப்பட்டதாகத் தெரிகிறது. 'கம்யூனிஸ்டுகளுடன் எவ்வித உறவும் கூடாது' என்ற சோஷலிஸ்ட் நிபந்தனைக்கு பிரஜா கட்சி தலைவணங்க அவர்கள் விரும்பவில்லை.

(முதற் பக்கத் தொடர்ச்சி)

கிறது! ராயலசீமாவும், தாராபுரமும், இன்னும் பஞ்சப் பிரதேசங்களும் கித்வாயின் கண்களில் படவில்லை.

எனவே, சென்னை ராஜ்யத்தில் ராஜாஜி சர்க்கார் எடுத்துள்ள ரேஷன் ஒழிப்பு அபாய நடவடிக்கை, இந்த ராஜ்யத்தை சம்பந்தித்த பிரச்னை மட்டுமல்ல. அகில இந்திய உணவுக் கொள்கையில் இது ஒரு பாகம்தான். மக்களுக்கு உணவளிக்க வேண்டிய தன் பொறுப்பைத் தட்டிக்கழிக்க இந்திய சர்க்கார் முன்வந்து விட்டது.

(4-ம் பக்கத் தொடர்ச்சி)

பூரண ஆயுளே. தவறான காரியங்களைச் செய்ய சர்க்காரே தூண்டி விடுகிறது.

சத்தியம், நேர்மை, ஒழுங்கு பற்றி உபதேசம் செய்யும் காங்கிரஸ் ஆட்சி இந்த இழி செயல் நிகழா வண்ணம் தக்க நடவடிக்கை எடுக்குமா? மக்களும் கொடுமைக்குள்ளாகியுள்ள தொழிலாளிகளும் இது விஷயத்தில் ஒன்றுபட்டு இந்த ஊழலைத் தடுக்க முன்வர வேண்டுமென அவர்களைக் கேட்டுக் கொள்ளுகிறேன்.

**சைமன்பால்**
தமிழ்நாடு தொ. ச. காங்கிரஸ்,
உதவி செயலாளர்.

# நேரு-பிரிட்டிஷ் பாதுகாப்பு மந்திரி சந்திப்பு

## கொரியப் போரை விஸ்தரிக்க முயற்சியா?

(நம் நிருபர்)

புதுடில்லி ஜூன் 8—

கொரியப் போரில் அதிக பொறுப்பேற்றுக் கொள்ளவும், அப்போரை மேற்கொண்டு விஸ்தரிக்கவும் திட்டமிடுவதற்காக கொரியப் போர்க்களத்தைப் பார்வையிடச் சென்றுகொண்டிருக்கும் பிரிட்டிஷ் பாதுகாப்பு மந்திரி அலெக்சாண்டர் பிரபு இன்று புதுடில்லியில் இறங்கி நேருவைச் சந்தித்துப் பேசினார்.

முன்கூட்டியே ஏற்பாடு செய்யப்படாமல் திடீரென அவசரமாக நடைபெற்ற இந்த சம்பாஷணைகளுக்கு அரசியல் வட்டாரங்கள் அதிக முக்கியத்துவம் அளிக்கின்றன. கொரிய நிலைமையைப்பற்றி அபிப்பிராயங்கள் பரிமாறிக் கொள்ளப்பட்டனவாம்.

கொரியாவில் நடக்கும் பேச்சு வார்த்தைகளை முறித்துக் கொண்டு மீண்டும் அமெரிக்க பிரிட்டிஷ் யுத்த வெறியர்கள் போர் துவக்கினால் இந்தியா எவ்வளவு தூரம் இதற்கு ஆதரவளிக்கும் எனத் தெரிந்து கொள்வதே அலெக்ஸாண்டரின் நோக்கமாம்.

கொரியாவிலும் சீனாவிலும் அமெரிக்க வெறியர்கள் கிருமிக் குண்டு வீசியது பற்றியும், கோஜே தீவில் யுத்தக் கைதிகளை அமெரிக்கர்கள் கொன்று குவிப்பது பற்றியும், குண்டுகள் வீசி கொரிய பேச்சு வார்த்தைகளை அமெரிக்கர் முறித்துவிட முயற்சிப்பது பற்றியும் திட்டவட்டமாகக் கண்டிக்காத பண்டித நேரு கொரியப் போரை விஸ்தரிக்க திட்டமிட்டுள்ள பிரிட்டிஷ் பாதுகாப்பு மந்திரியை முன்னேற்பாடு கூட இல்லாமல் திடீரென சந்தித்ததானது, அரசியல் வட்டாரங்களிடையேயும், பொது மக்களிடையேயும், பெரிதும் ஆச்சரியத்தையும், குழப்பத்தையும் உண்டுபண்ணியிருக்கிறது.

# கைத்தறித் தொழில் நெருக்கடியைத் தீர்க்க

## உடனடி நடவடிக்கை தேவை

### தோழர் பார்த்தசாரதியின் அறிவுறுத்தல்

சென்னை, ஜூன் 8—

தமிழ்நாடு கைத்தறி நெசவுத் தொழிலாளர் சம்மேளனத்தின பொதுக் காரியதரிசி தோழர் கே. எஸ். பார்த்தசாரதி பின்வரும் அறிக்கையை வெளியிடுகிறார்.

தற்போது நெசவாளர்களுக்கு ஏற்பட்டுள்ள நெருக்கடி சர்க்காரை நிர்ப்பந்தப்படுத்தும் அளவிற்கு வளர்ந்துள்ளது. சென்னை சர்க்காரால் கூட்டப்பட்ட 'ஹை பவர்' கமிட்டிக் கூட்டம் 29-5-52 லும், 4-6-52லும் கூடியது. கைநெசவுத் தொழிலாளிகளின் நெருக்கடியை உடனடியாகத் தீர்க்க வழி செய்யவில்லையெனறால், அந்தத் தொழிலே அழிந்துவிடுமென சர்க்கார் திட்டத்தில் குறிப்பிடப்பட்டுள்ளது. இந்த உணர்வு ஏற்பட்டது (ஆயிரக் கணக்கான பட்டினிச் சாவுகள், குடும்பம், குடும்பமாக பிச்சை எடுக்கும் நிலைமை ஏற்பட்ட பிறகாவது) வரவேற்கத் தக்கதே.

என்றாலும், நூல் விலை குறைக்கப்பட வேண்டும்; ஒரே நம்பர் நூலுக்கு வெளிநாட்டுப் பருத்தியால் உற்பத்தி செய்தால் விலை கூடுதலும், உள் நாட்டுப் பருத்தியிலிருந்து உற்பத்தி செய்தால் விலை குறைவதும்—என்ற வித்யாசத்தைப் பார்த்து, உயர்ந்த விலையில் உள்ள நூலை (வெளிநாட்டுப் பருத்தி நூல்) காம்போஸிட் மில்லுக்குத் தருவது; உள்நாட்டுப் பருத்தியால் நெய்யப்படும் நூலை கைத்தறிகளுக்கு சப்ளை செய்வது என்பதையும்,

பொதுவாக, தற்போதுள்ள நூல்விலைகளைக் குறைக்கும்படி டில்லி சர்க்காரை நிர்ப்பந்தப்படுத்த வேண்டுமென்பதையும் சர்க்கார் ஏற்றுக்கொள்ளும்படி வற்புறுத்தப்பட்டது.

#### நிவாரணம் தேவை

இனிமேல் உற்பத்தியாகும் துணியை பஞ்சக் கூலி அடிப்படையில் வாங்கிக் கொள்வது, என்பது மட்டும்தான் சர்க்கார் கொண்டுவந்த திட்டத்தில் மிகப் பிரதானமானது. தேங்கிக் கிடக்கும் கைத்தறி ஜவுளிபற்றி கவலைப்படப் போவதில்லையென்றே அவர்கள் வைத்த திட்டத்தில் வற்புறுத்தப்பட்டிருந்தது.

இந்தத்திட்டம் உபயோகமற்றதுஎன, சம்மேளனத்தின் பிரதிநிதி சுட்டிக்காட்டினார். மேலும் இது நிவாரணத்திற்கான திட்டமல்ல என்றும் வற்புறுத்தினர். அதன பின் மாகாண ரிஜிஸ்டரார்ரயானின் திட்டம் முனவைக்கப்பட்டது. இவருடைய திட்டத்திலும் கைத்தறி ஜவுளித் தேக்கத்தைப் போக்க அக்கரை காட்டப்படாததைச் சுட்டிக்காட்டி, பிரதானமாக ஜவுளி தேக்கத்தால் சொஸைடிகள் பட்ட நஷ்டத்தை சர்க்கார் மானயம் (சப்ஸிடி) கொடுப்பதின் மூலம் ஈடுசெய்ய வேண்டுமென்று கூறினோம்.

தேங்கிக் கிடக்கும் சரக்கை விற்க, பல வழிகளைக் கூறியுள்ளோம். இதைப்பற்றி சர்க்கார் நிர்வாகத்திடம் கூறுவதாக கிதி மந்திரி வாக்களித்தார்.

#### உருப்படியான யோசனை

அதற்குப் பின், ரிஜிஸ்ட்ராரின் திட்டத்தில் பின்வரும் திருத்தங்கள் சேர்க்கப்பட வேண்டுமென்று வற்புறுத்தினோம் :—

1. ஜில்லாவிற்கு ஆயிரம் தறிகள் வீதம் (புதிதாக கூட்டுறவு சொஸைடிகளில்) கொண்டு வருவதென்பதற்குபதில், எவ்வளவு தறிகள் வேண்டுமானாலும் சேர்க்கலாம்.

2. பழைய சொஸைடி உள்ள இடத்தில்தான், புதிய தறிகளை சேர்ப்பது என்பது மாத்திரமின்றி, புதிய இடங்களிலும் புதிய சொஸைடிகள் ஆரம்பிக்கலாம்.

3. 40-ம் நம்பர் நூலுக்குட்பட்ட நம்பர் நூல்தான் புதிய தறிகளில் தயாரிப்பது என்பதைக் கைவிட்டு, எந்த நம்பர் நூல் வேண்டுமானாலும், எந்தெந்த ரகம் எந்தெந்த இடத்தில் நெய்கிறதோ (ஜமக்காளம், பட்டு) அதை அனுசரித்துத் தயாரிக்கலாம்.

4. நூல் விலை குறைக்கப்பட வேண்டியதும், நூல் வினியோகக் கோட்டா ஒதுக்குவதும், வெளி நாடுகளுக்குத் துணி ஏற்றுமதி செய்வதும் சம்பந்தமான அதிகாரங்கள் மத்திய சர்க்கார் கையிலிருப்பதால், மத்திய சர்க்காருக்குப் போதிய நிர்ப்பந்தம்கொண்டுவர, கைநெசவுத் தொழிலாளிகளும், பொது மக்களும் முன்வர வேண்டுகிறேன்.

மேலும், மேற்படி திட்டத்தை நடைமுறைக்குக் கொண்டுவரும்படி செய்ய, கைநெசவுத் தொழிலாளிகள், ஆங்காங்கு சொஸைடிகள் அமைத்துக் கொடுக்கும்படி ஜில்லா ரிஜிஸ்ட்ராருக்கும், மாகாண ரிஜிஸ்ட்ராருக்கும் மகஜர்கள் தயாரித்து அனுப்ப வேண்டும். தாமதிப்பது பட்டினிச் சாவுகளை அதிகப்படுத்துவதாகும். மேற்படி திருத்தங்கள் சேர்க்கப்படாமலேயே, கடந்த இரண்டு நாட்களாக, பத்திரிகைகளில் வந்த செய்திகள் சரியானதல்ல.

# 10 வருடத்தில் குத்தகை இரண்டு மடங்கு உயர்ந்தது

## குறைந்தது சுப்ரமணியம் கமிட்டி சிபாரிசுகளையாவது அமுல் நடத்துக!

### அலங்காநல்லூர் பிர்க்கா விவசாயிகள் மகாநாடு

அலங்காநல்லூர் ஜூன் 7—

அலங்காநல்லூர் பிர்க்காவில் நஞ்சையில் இருபோகங்கள் விளைகின்றன, ஆனால் விளைச்சலில் பெரும்பகுதி நிலச்சுவான்தார்களுக்கு குத்தகையாக கொடுக்க வேண்டியிருக்கிறது. கடந்த 10 வருடங்களில் இக் குத்தகை உயர்வு சுமார் 2 மடங்கு உயர்ந்திருக்கிறது. இதனால் நாளுக்கு நாள் விவசாயிகள் நலிவடைந்து கடன்காரர்களாகி வருகின்றனர். லேவாதேவிக்காரர்களின் பிடியில் சிக்குண்டு தவிக்கிறார்கள். நிலச்சுவான்தார்களுக்கு விவசாயிகள் அட்வானசாக பணம் கொடுக்கும்படி நிர்ப்பந்திக்கப்படுகிறார்கள். குத்தகை, வார விவசாயிகளின் இந்த உடனடிக் கஷ்டங்களை நிவர்த்திக்க குறைந்தது சுப்ரமணியம் கமிட்டி சிபார்சுகளையாவது அமுல்நடத்த வேண்டும்.

அட்வான்ஸ் முறை, இடைத்தட்டு தரகர் முறைகளை சர்க்கார் தடை செய்ய வேண்டும் என மதுரை ஜில்லா, நிலக்கோட்டை தாலுக்கா, அலங்காநல்லூர் பிர்க்கா விவசாயிகள் மகாநாட்டில் தீர்மானம் நிறைவேற்றப்பட்டது.

மகாநாடு வலசை கம்மாளப்பட்டியில் மே 30-ம் தேதியன்று மதுரை ஜில்லா விவசாய சங்கக் காரியதரிசி தோழர் ராமராஜின் தலைமையில் நடைபெற்றது. மகாநாட்டிற்கு 30 கிராமங்களிலிருந்து ஏராளமான விவசாயப் பிரதிநிதிகள் வந்திருந்தனர். பொதும்பிலிருந்தும், அய்யனம்பட்டியிலிருந்தும் விவசாய மக்கள் செங்கொடிகளுடன் ஊர்வலமாகப் புறப்பட்டு பல கிராமங்களில் சுற்றிப் பிரச்சாரம் செய்துகொண்டே மகாநாட்டுப் பந்தலுக்கு வந்தனர். மகாநாட்டில் 600 பெண்கள் உள்பட 6,000 விவசாயிகள் கலந்து கொண்டனர்.

தோழர் மதனகோபால் எம். எல். ஏ. மகாநாட்டைத் திறந்து வைத்துப் பேசுகையில், காங்கிரசாட்சியின் கீழ் விவசாயம் சீரழிந்துபோனதையும், இன்றைய பஞ்சம், பசி, பட்டினி, வேலையில்லாத் திண்டாட்டம் முதலியவற்றை ஒழிக்க ஐ. ஜ. முவின 12 அம்ச திட்டம் அமுல் நடத்தப்பட வேணடுமென்றும், விவசாய வெகுஜன ஸ்தாபனங்களை பலப்படுத்தி கிளர்ச்சி செய்வதின் மூலமே இது விரைவில் கைகூடுவது சாத்தியமாகும் என்றும் கூறினார்.

தோழர்கள் என். சங்கரய்யா, கே. பி. ஜானகி, மற்றும் தி.மு.க. தோழர்கள் எம். அய்யாசாமி, எம். ஆர். கணேசன முதலியோர்களும் விவசாயப் பிரச்னைகளை நனகு விளக்கிப் பேசினார்கள்.

அரசியல் கைதிகள் விடுதலை கோரியும், பாலன் தூக்கு தண்டனையை ரத்து செய்ய வேண்டிக் கொண்டும், வெல்லத்திற்கு நியாய விலை நிர்ணயிக்க வேண்டுமென்றும், இன்னும் விவசாயிகளின் பல அன்றாட கோரிக்கைகள் பற்றியும் தீர்மானங்கள் நிறைவேற்றப்பட்டன.

இரவு 10½ மணிக்கு மேல் தோழர் திருமூர்த்தி கோஷ்டியினரின புதுமைக் கலா நிகழ்ச்சி நடைபெற்றது. (நமி.)

# "தினசரி"யில் சாமான்கள் ஜப்தி!

## திரு. சொக்கலிங்கத்தின் மீது நடவடிக்கை

### சம்பளம் கொடுக்காமல் ஏமாற்றிவந்ததின் விளைவு

சென்னை, ஜூன் 8—

உதவி ஆசிரியர் ஒருவரை வேலையிலிருந்து நீக்கிய பின் சம்பளம் கொடுக்காமல் காலத்தைக் கடத்திக்கொண்டு வந்த "தினசரி" ஆசிரியரும், டைரக்டருமான டி.எஸ். சொக்கலிங்கத்தின மீது பிரதம மாகாண மாஜிஸ்ட்ரேட் நேற்றுமுன் பிறப்பித்த ஜப்தி வாரண்டின் மீது பெரிய மெட் போலீசார் நடவடிக்கை எடுத்து சாமான்களை நேற்று ஜப்தி செய்தனர்.

"தினசரி" காரியாலயத்தில் ஆரம்பம் முதற்கொண்டு வேலை செய்துவந்த உதவி ஆசிரியர் என். ஏ. ராமநாதனுக்கு ஜனவரி மாதம் நோட்டீஸ் தரப்பட்டது. அவர் தமக்கு சேரவேண்டிய பாக்கிக்காக பலமுறை கேட்டும் பிரயோசனப் படாமற்போகவே தொழில் கமிஷனரிடம் முறையிட்டுக்கொண்டார். அதனமீது கமிஷனர் ஸி. ஜி. ரெட்டி விசாரணை செய்து வேலையிலிருந்து நீக்கப்பட்டவருக்கு ரூ. 358-13-0 உடனடியாய் கொடுக்கவேண்டுமென்று ஏப்ரல் 8ந் தேதி உத்தரவிட்டார். இந்த உத்தரவை தேசபக்தர் சொக்கலிங்கம் நிறைவேற்றாமற் போகவே, தொழில் கமிஷனர் பிரதம மாகாண மாஜிஸ்டிரேட்டுக்கும் அனுப்பி பணத்தை வசூலிக்குமாறு கேட்டுக்கொண்டார்.

இந்த வழக்கு மே 15, 26, ஜூன் 2, 5 ஆகிய தேதிகளில் சென்னை மாகாண பிரதம மாஜிஸ்டிரேட் முன் விசாரணைக்கு வந்தது. தாமாக டி. எஸ். சொக்கலிங்கம் பணத்தைக் கொடுக்காமல் போகவே, பிரதம மாகாண மாஜிஸ்டிரேட் ப. வெங்கட்ரமண நாயுடு ஜப்தி வாரண்டை கடைசியில் பிறப்பித்தார். அதன் மீதுதான் போலீசார் நேற்று நடவடிக்கை எடுத்தனர். 3 டைப்ரைட்டிங் மெஷின்கள், ஒரு இரும்பு அலமாரி, பணம்வைக்கும் பெட்டி ஆகியவைகளை போலீசார் நேற்று ஜப்தி செய்தனர்.

இந்த சாமானகள் ஜப்தி செய்துகொண்டு போகும்போது ஏராளமான கூட்டம் கூடிவிட்டது.

# பெரிய அளவில் ஜனசக்தி விரைவில் வெளிவர

## உங்கள் கடமையை ஆற்றுங்கள்

தோழர்களே, வாசகர்களே,

*ஜூலை மாதம் முதல் வாரத்திலிருந்து ஜனசக்தியைப் பெரிய அளவில் கொண்டுவர வேண்டுமென்று திட்டமிட்டுள்ளோம். அதற்கு உடனடியாக டெலிபிரிண்டர், பத்திரிகைக் காகிதம், இதர அச்சக சாமான்கள் ஆகியவை வாங்கியாகவேண்டும். ஆகவே ஜனசக்தி நிதிக்கு உங்களுடைய நன்கொடையை உடனே அனுப்புங்கள். உங்கள் நண்பர்களிடமும், ஆதரவாளர்களிடமும் நிதி வசூலித்து அனுப்புங்கள்: கூட்டங்களிலும் வசூல் செய்யுங்கள். ஸ்தாபனகள் மூலமும் உண்டியல் வசூல் செய்யுங்கள்.*

—மா. கமிட்டி

(22-5-52 முதல் 7-6-52 முடிய)

| | | | | |
|---|---|---|---|---|
| பி என் கிருஷ்ணசாமி பிள்ளை உடுமலைப்பேட்டை | ... | 10 | – | – |
| நெல்லிக்குப்பம், வரதன் அகிலாண்டம் திருமணத்தின் போது கொடுக்கப்பட்டது | ... | 5 | – | – |
| பெருவிடைமருதூர் கலியபெருமாள்—பேபிக்கும் நடந்த திருமணத்தின்போது கொடுக்கப்பட்டது | ... | 1 | – | – |
| ஆனவந்தார் மூலம் ஜனசக்தி நிதிக்கு கொடுக்கப்பட்டது | ... | 14 | – | – |
| கோவை எம். பூபதிமூலம் காசிமுத்து | ... | 5 | – | – |
| எ கந்தசாமி செட்டியார் | ... | 5 | – | – |
| நெல்லை முருகவிலாஸ் ஹோட்டல் தொழிலாளிகள் | ... | 4 | – | – |
| உடுமலைப்பேட்டை மா சுப்ரமணியம் விதவா விவாஹத்தின்போது கொடுத்தது | ... | 1 | 14 | – |
| பழைய வத்தலகுண்டு பிர்க்காவில் நடந்த திருவிழாவின்போது, கம்யூனிஸ்ட் கட்சி தோழர்களும் அனுதாபிகளும் வசூலித்தது | ... | 5 | – | – |
| விருதுநகர் சுருட்டுத் தொழிலாளர் சங்கம் | ... | 3 | – | – |
| கீழவாணி வெங்கடசாமி கொடுத்தது | ... | 10 | – | – |
| திருவாரூர் தியாகராஜன் பாலசுந்தரி திருமணத்தின் போது கொடுக்கப்பட்டது | ... | 5 | – | – |
| தர்மபுரி பச்சையப்பன், பச்சையம்மாள் திருமணத்தின் போது கொடுக்கப்பட்டது | ... | 1 | 14 | – |
| சென்னை தென்னிந்திய ரயில்வே குமாஸ்தாக்களும், கான்டீன் தொழிலாளிகளும் வசூல் செய்த ரூ. 7-14-0 ல், பாலன் தூக்கு தண்டனையை எதிர்த்து, பிரதமருக்கும், ஜனாதிபதிக்கும், ராஜாஜிக்கும் கொடுக்கப்பட்ட தந்திக்கும், கடிதப் போக்குவரத்துக்கும் ஆன செலவுபோக மீதமுள்ள தொகையை ஜனசக்தி நிதிக்கு கொடுக்கப்பட்டது | ... | 4 | 8 | – |
| ஆக மொத்தம் ரூ | | 75 | 4 | 0 |

# கடலூர் சப் ஜெயில்

கடலூர், ஜூன் 1—

கடலூர் சப்.ஜெயிலில் 33 பேர் இருக்கலாம். அதில் 6 பேர்கள் இருக்கக்கூடிய ஒரு அறை 3மாத காலமாக பழுது பார்க்கப்பட்டு வருகிறது. இதில் தற்சமயம் 50 கைதிகள் உள்ளனர். சில சமயம் 100 பேரும் அடைக்கப்படுவது உண்டு. அறையெல்லாம் ஒரே மூட்டைப் பூச்சிமயம். வெள்ளையடிப்பதைப் பற்றிப் பேச்சுமூச்சில்லை. இதன் சூப்பிரண்டான, சப்-மாஜிஸ்ட்ரேட் சப் ஜெயிலை பார்வையிட வருவதே கிடையாது.

இங்கு, வேணுகோபால் என்ற கம்யூனிஸ்ட் தோழர், வெடி மருந்து வழக்கில் விசாரணைக் கைதியாக 2½ மாதமாக இருந்து வருகிறார். இவரை அரசியல் கைதியாக நடத்தவில்லை. உண்ணாவிரதம் ஆரம்பிப்பதென நிச்சயித்துள்ளார் இவர்.

இங்கு பகல் உணவு சோளக் களிதான். இதனால் வயிற்றுப் போக்கு ஏற்பட்டு கைதிகள் மிகவும் கஷ்டப்படுகின்றனர். சொரி சிரங்கு உபத்திரவம்வேறு. வைத்திய வசதி, குளி தண்ணீர் வசதி இடையாது.

ஐயோ, ஆச்சாரியார் சிறை நிர்வாகமே!

●

பிரிட்டனில் கடந்த 2 வருடங்களில் திரையிடப்பட்ட 572 படங்களில் சுமார் 290படங்கள் கொலையையும், களவையும், காமவெறியையும் சித்தரிக்கும் ஹாலிவுட் படங்களே.

# ஒற்றுமை யின்மையால் வந்த கேடு

இராஜபாளையம், ஜூன். 3—

இராஜபாளையம் மில்ஸ் ஸ்பின்னிங் மாஸ்டர் 20-5-52ல் ரீலிங் பெண்களிடம் துஷ்டத்தனமாக நடந்துகொண்டார். அது சம்பந்தமாக அவர்மீது நடவடிக்கை எடுக்க வேண்டுமென்று தொழிலாளிகள் கோரினர். ஆனால் நிர்வாகம் கவனிக்காமல் போகவே 28-5-52ல் ஸ்டிரைக் செய்தனர்.

நிர்வாகம் வேலை நிறுத்தத்தை சாக்குக் காட்டி மில்லை கதவடைப்பு செய்தது. கதவடைப்பை வாபஸ் வாங்கும்படி செய்ய ஒன்றுபட்டு வரும்படி மது சங்கம் தேசிய தொழிற் சங்கத்திற்கு அழைப்பு விட்டது.

அவர்கள் மறுத்ததால், தொழிலாளிகளிடம் உள்ள பிளவின் காரணமாக ஒருநாள் சம்பளம் பிடித்தத்துடன் கதவடைப்பை முடிக்க ஒப்புக்கொள்ள வேண்டியதேற்பட்டது.

# பாலன் உயிரை மீட்க

அருப்புகோட்டை :

ஜூன் மாதம் 3-ம் தேதியன்று மலைப்பட்டி விவசாயிகள் சங்கக் கட்டிடத்தில் நடைபெற்ற விவசாயிகள் கூட்டத்தில் தோழர் சி. ஏ. பாலன் மீது விதிக்கப்பட்டுள்ள தூக்கு தண்டனை ரத்து செய்ய வேண்டுமென்ற தீர்மானம் நிறைவேற்றப் பட்டது. ஒரு மகஜரில் சுமார் 1000 கையெழுத்துக்கள் வாங்கப்பட்டு ஜனாதிபதிக்கு அனுப்பப்பட்டுள்ளது.

நெல்லிக்குப்பம் ஆலைத் தொழிலாளர் சங்கத்தில் ஜூன் 3-ம் தேதி நடைபெற்ற பொதுக்கூட்டத்திற்கு உழைப்பாளர் கட்சி எம்.எல்.ஏ., திரு. ஏ. கோவிந்தசாமி தலைமைவகித்தார். தோழர் பாலன தூக்கு தண்டனையை ரத்து செய்யப்பட வேண்டி தீர்மானம் நிறைவேற்றப்பட்டது

# பயமற்ற, இன்பம் கொழிக்கும் அற்புத நாடு

## சோவியத் நாட்டைப்பற்றி திரு. குமரப்பா

சென்னை, ஜூன் 8—

சென்னை சர்க்கா சங்க ஆதரவில், மாஸ்கோ பொருளாதார மகாநாட்டுக்குச் சென்றிருந்த திரு. ஜே. சி. குமரப்பா ருஷ்ய சுற்றுப்பிரயாணத்தின் போது தனக்குக் கிடைத்த அனுபவங்களைப் பற்றி ஜூன் 7-ம் தேதி நடந்த கூட்டத்தில் ஒரு அருமையான சொற்பொழிவு நிகழ்த்தினார். அவரது ஆங்கில பிரசங்கத்தை தமிழில் மொழிபெயர்த்த காங்கிரஸ் வாதியான திரு. வெங்கடாசலபதி, "அமெரிக்கன் ரிப்போர்ட்டர்" மூலமாக ருஷ்யாவைப் பற்றி நான் கொண்டிருந்த அபிப்ராயத்தை அப்படியே மாற்றும்படியாக இருந்தது திரு. குமரப்பாவின் உணர்ச்சிகரமான பிரசங்கம். விட்டுக்கொடுக்காமல் உண்மையையேகூறும் திரு. குமரப்பா சொன்னதை நான் நம்பாமலிருக்க முடியவில்லை என்று கூறினார். திரு. குமரப்பாவின் சொற்பொழிவின் சாரத்தைக் கீழே தருகின்றோம்.

### "இரும்புத்திரை"

ரஷ்யாவில் இரும்புத்திரை இருப்பதாக அடிபடுகிறது. ஆம் ருஷ்யாவுக்கும் வெளியுலகத்துக்கும் இரும்புத்திரை யிடப்பட்டிருக்கிறது. அது ருஷ்யாவிற்குள் இல்லை. இந்த இரும்புத்திரை ஒரு புலிக்கும் ஆட்டுக் குட்டிக்கும் குறுக்கே போடப்பட்டுள்ள திரையாகும். இப்படிப்பட்ட திரைக்கு யாராவது ஆட்சேபம் கூறமுடியுமா? அமெரிக்காஎன்றபுலி தான இரும்புத்திரை என்று கூச்சல் போடுகின்றது. ருஷ்ய மக்கள் தங்களது சமுதாய அமைப்பைக் கட்டிக்காக்க விரும்பியே இவ்வாறு செய்துள்ளனர்.

நம நாட்டில் பெரும் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்குமிடையே இரும்புத்திரை மாத்திரமல்ல, உருக்குத்திரையே இருக்கிறது. ஆனால் ருஷ்யாவில் அதிகாரிகளுக்கும் ஜனங்களுக்கும் நெருங்கிய தொடர்பு இருக்கின்றது. வெளிநாட்டு மக்களமீது தோழமையும், நட்புணர்ச்சியும் கொண்டிருக்கிறார்கள் அந்த மக்கள்.

### ஆக்ரமிப்பு ஆசை கிடையாது

அமெரிக்கா தனது பண்டங்களை விற்க புதிய மார்க்கெட்டுகளைத் தேடி அலைகிறது. ஆனால் ருஷ்யாவிற்கு அது தேவையில்லை. பிற்பட்டுக் கிடக்கும் நாடுகளுக்கு அது உதவுகிறது; அதனால் அந்தநாடு அபிவிருத்தியடைந்து முன்னேறுகிறது. இத்தகைய நாடுகளைத் தான, ருஷ்யாவின் கீழுள்ள நாடுகள் என்று அமெரிக்கா கூறுகிறது.

உஜ்பெகிஸ்தான் தலைநகரான டாஷ்கண்ட் போயிருந்தேன். அது ஒரு முஸ்லிம்கள் வாழும் மிகவும் பிற்போக்கிலிருந்த நாடு. ஆனால் இன்று அது பொருளாதார, கலாச்சார ரீதியில் மிகவும் முன்னேற்றமடைந்துள்ளது. மிகப்பெரிய தொழிற்சாலைகளையும் உஸ்பெக் மக்களே நிர்வகிக்கின்றனர். அவர்களின்கீழ் யந்திரத்தேர்ச்சி பெற்ற ருஷ்யர்கள் வேலை செய்கின்றனர். அந்த நாட்டில் ஒரு சில வயது சென்ற பெண்களிடம் தவிர, மற்றபடி கோஷா முறை அமுலில்லை.

ஆனால் அமெரிக்காவின் ஆக்கிரமிப்பிலிருக்கும் ஜப்பானைப் பாருங்கள். ஜப்பானுக்கு, பண்டித நேருவின் வேண்டுகோளின் மீது நான் சென்றிருந்தேன். ஜப்பானிய நாட்டிலே ஜப்பானிய மக்களை அமெரிக்கர்கள் அவமதிக்கிறார்கள். ஹோட்டல்களிலும், டாக்ஸி கார்களிலும் ஜப்பான்காரர்கள் நுழைய முடியாது. 'ஜப்பானியர்களும், நாய்களும், அநுமதிக்கப்படமாட்டாது, என்று தொங்கும் பலகைகளைப் பார்த்தேன். அமெரிக்காவிலும், அமெரிக்க பிரஜைகளான நீக்ரோ மக்களை மிகவும் கொடுமையாக நடத்துகின்றனர். ஆனால் ருஷ்யாவில் சகலவித ஜாதி ஏற்றத் தாழ்வுகளையும் அறவே ஒழித்துவிட்டார்கள்.

### சுதேசி ஆர்வம்

உண்மையான சுதேசி ஆர்வம் ருஷ்யாவில் நிலவுகிறது. அங்கு ஒரு பொருள் அதிக விலையா என்பதல்ல பிரச்சினை; அதனால் தொழிலாளிக்கு நல்ல ஊதியம் கிடைக்குமா என்பதுதான் பிரச்சினை. ஒரு கப் கொக்கோ அங்கு 2 அல்லது 3 ரூபாய்க்கு விற்கப்படுகிறது. ஆனால் அங்கு வாழ்க்கைத்தரம்—சமூக ரீதியிலும் சரி, பொருளாதார ரீதியிலும் சரி மிகவும் உயர்ந்திருக்கிறது. அதனால் தாராளமாக அதை வாங்குகிறார்கள்; அதனால் ஹோட்டல் தொழிலாளிகளுக்கு நல்ல சம்பளம் கொடுக்க முடிகிறது. இதில், அவர்கள் காந்தீயத்தையும் கடந்து மேலே சென்றுவிட்டார்கள்; அங்குள்ள சம்பள விகிதத்தில் 1 முதல் 10 மடங்கு வித்தியாசம்தான இருக்கிறது. அந்த விகித முறையை இந்தியாவில் அமுலுக்குக் கொண்டுவந்தால், தெருக்கூட்டுவோருக்கு சம்பளம் ரூ. 100 என்றால், டாட்டா, பிர்லாவுக்கு ரூ. 1000 கிடைக்கும். இதில் என்ன தப்பு? இம்மாதிரி முறையான விநியோகத்தை யார் ஆட்சேபிப்பார்கள்? அமெரிக்கா இங்கிலாந்திலுள்ளவர்களும், இந்தியாவிலுள்ள ராஜேந்திரபிரசாத் போன்றவர்களும் கொழுத்த சம்பளம் பெறுபவர்களும்தான இதை ஆட்சேபிக்க முடியும். அவர்கள், ருஷ்ய எதிர்ப்புப் பிரசாரம் செய்கிறார்கள்.

மக்களது அத்தியாவசியமான குறைந்தபட்சத் தேவைகளை—உணவு, உடை அவர்களுக்கு ஏராளமாகக் கிடைக்கும்படி, உத்தரவாதமளித்துள்ளார்கள். கலை வளர்ச்சிக்கான காமெரா, பைனகுலர் போன்ற சாமான்களும் ஏராளமாக அங்கு கிடைக்கின்றன. அவசியமல்லாததற்கு அநாவசியமாக செலவழிக்கவுமாட்டார்கள், சிரமமெடுத்துக் கொள்ளவுமாட்டார்கள். எத்தகைய சுரண்டலும் அங்கு இடையாது. எல்லாத் தொழில்களும் தேசத்தின் சொத்தாகிவிட்டது.

### பெண்ணுரிமை

விபசாரத்திற்கு தடை விதிக்கப்பட்டு, அதற்கு இடமில்லாது செய்யப்பட்டுள்ளது. திருமண ஏற்பாடுகள் பிரமாதமானவை. விவாக ரத்து செய்துகொள்வது சுலபமான காரியமல்ல. சமூகத்தைப் பீடிக்கும் தீங்குகளை விரைவில் களைந்தெறிகிறார்கள். வெட்டை சம்பந்தமான நோய் மிகமிகக் குறைவு. அமெரிக்காவிலோ நிலைமை வேறு விதமா யிருக்கிறது. ஹாலிவுட்டில் ஒரு பெண் சராசரி 12 தடவை கல்யாணம் செய்துகொள்கிறாள்.

ருஷ்ய சமூக வாழ்வில் குடும்பம்தான மையவட்டம். உயர்ந்த ராணுவ அதிகாரிகள் தங்கள் குழந்தைகளை தோளில் சுமந்து செல்கின்றனர். ருஷ்யர்கள் குடும்பப் பற்றற்றவர்கள் என்று பிரச்சாரம் செய்யப்படுவது சுத்த அபத்தம். நேரில் பார்த்த பிறகு தான எனக்கும் உண்மை புலப்பட்டது. இம்மாதிரி மகிழ்ச்சியான குடும்ப வாழ்வை நான் எங்குமே கண்டதில்லை.

ருஷ்யர்கள் பயமற்றவர்கள், குழந்தைகள்கூட பயமின்றி இருக்கின்றனர். இன்பமும், எழிலும் நிறைந்த மனம் படைத்தவர்கள் அவர்கள். அதிகாரிகளைக் கண்டால் குழந்தைகள் நம் நாட்டில் பயந்து ஓடும். நான் மாஸ்கோவின் வீதியொன்றில் போய்க்கொண்டிருந்தேன்—கதர்க் குல்லாய், கதர்ஆடை உடையில் அப்பொழுதுதான் நடக்கக் கற்றுக் கொண்ட ஒருசிறு குழந்தை எத்தகைய பீதியுமில்லாமல், என்னை, ஏதோ ஒரு புதிய பிராணியை வியந்து பார்ப்பதுமாதிரி சிரித்த வதனத்துடன் பார்த்த வண்ணமிருந்தது.

ஸ்டாலின் கிராடில், 8 வயதுப் பெண் ஒன்று, ஒரு மரத்தின் பக்கம் நின்று கொண்டு என்னைப் பார்த்தது. நான் கொஞ்சதூரம் போனதும் அந்தப் பெண் என் எதிரில் வந்து நின்று, பிரசங்கம் செய்வது மாதிரி ருஷ்ய மொழியில் பேசியது. "நீங்கள் உலக சமாதானத்தை நிறுவி, யுத்தத்தைத் தடுக்கவா வந்திருக்கிறீர்கள்?" என்ற பொருளில் அது கேட்டதாக அறிந்துகொண்டேன். 'ஆம்' என்று நான் பதில் கூறினேன். எத்தகைய பயமும்இல்லை அந்தகுழந்தைக்கு. ஆனால் அதன் உள்ளத்தில், ஸ்டாலின் கிராட் குழந்தையல்லவா அது—ஹிரோஷீமா போல அணுகுண்டினால் அழியாவிட்டாலும், ஸ்டாலின்கிராட் முழுவதும் நாசமடைந்துவிட்ட சம்பவம் அக்குழந்தைக்குத் தெரிந்திருக்க வேண்டும்-யுத்த பயம் ஏற்பட்டுள்ளது.

### இந்தியாமீது பாசம்

மாஸ்கோவில்,மகாநாட்டு மண்டபத்துக்கு வெளியே ஏராளமாக ஆண்களும், பெண்களும் கூடி நின்றனர், என்னை இந்திய உடையில் கண்ட ஒரு அம்மை "நீங்கள் எந்த நாட்டிலிருந்து வருகிறீர்கள்?" எனக் கேட்டாள் 'இந்தியா' என்றேன்.

அந்த அம்மை இந்தியா என்று உரக்கக் கூவினாள். உடனே அங்கிருந்த அனைவரும் 'இந்தியா வாழ்க' என்று கோஷமிடத் தொடங்கிவிட்டனர். கரகோஷமிட்டு எங்களை உற்சாகத்துடன் வரவேற்றனர்.

காந்தியத்தின் உயர்ந்த பண்புகளான சுயதேவைப் பூர்த்தி, சமத்வம் போன்றவற்றை ருஷ்யாவில் சாதித்துவிட்டார்கள் எனக் கூறி முடித்தார் திரு குமரப்பா.

## நம்மைச் சுற்றிலும்

புதுடில்லி ஜூன் 6—

பார்லிமெண்ட் மெம்பர்களுக்கு தினசரிப்படி, போக்குவரத்து அலவன்ஸ் ஆகியவைகளை எப்படி வழங்குவது என்பதுபற்றி ஆலோசனை செய்து, சர்க்காருக்கு சிபார்சு செய்ய ஒரு பார்லிமெண்ட் கமிட்டி ஏற்படுத்தப்பட்டுள்ளது. அதில் தோழர்கள் ஏ. கே. கோபாலனும், பி. சுந்தரய்யாவும் அங்கம் வகிக்கின்றனர்.

●

காட்மாண்டு ஜூன் 6—

திரு பத்ரகாளி மிஸ்ரா நேபாள சர்க்காரில் போக்குவரத்து மந்திரியாக இருந்தார். கொய்ராலாவின் அடக்குமுறை ஆட்சியை எதிர்த்தார் என்பதற்காக அவரை மந்திரி சபையிலிருந்து மன்னர் திரிபுவனர் டிஸ்மிஸ் செய்துள்ளார்.

## இங்கும்-அங்கும்

புரட்சிக்கு முன்னர் சீனத் தொழிலாளரின் நிலைமை மிகவும் கேவலமாகி இருந்தது. இப்பொழுது மக்கள் சர்க்காரின கீழ் அது தலைகீழாக மாறிவிட்டது. 1948 ஐ விட 1951ல் தொழிலாளர்களின் சம்பளம் $2\frac{1}{2}$ மடங்கு உயர்ந்திருக்கிறது. ஆணகளுக்கும் பெணகளுக்கும் வேலைக்குத் தகுந்த சம்பளமும், பாகுபாடின்றி சமவேலைக்கு சமசம்பளமும் கொடுக்கப்படுகிறது.

சீன சரித்திரத்திலேயே முதன் முறையாக தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டம் 1951 மே முதல் தேதியிலிருந்து அமுலுக்கு வந்தது.

100 பேருக்கதிமாக வேலை செய்யும் எல்லா தொழிற்சாலைகளிலுமுள்ள தொழிலாளர்கள் இதனால் பெரிதும் பயனடைந்தார்கள். 1951 அக்டோபருக்குள் இந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தில் 23 லட்சம் தொழிலாளர்கள் சேர்க்கப்பட்டனர். இத் தொழிலாளர்களின் குடுமபத்தினரையும் சேர்த்துக் கொணடால் சுமார் ஒரு கோடிப்பேர் இந்த தொழிலாளர் இன்ஷ்யூரன்ஸ் திட்டத்தினால் நன்மை அடைகிறார்கள்.

தொழிலாளரும்; அவர்களின் குடும்பத்தினரும் நோய் நொடியில் விழுந்தாலும் இதர ஆபத்துகளில் சிக்கினாலும் இந்த இன்ஷ்யூரன்ஸ் திட்டம் உதவி புரியும். பெண் தொழிலாளருக்கு பிரசவ காலத்தில் உதவியளிக்கும். முதியவர்களுக்கு தகுந்த ஆதரவளிக்கும். தொழிலாளர் அகால மரணமடைந்தால் அவருடைய குடும்பத்திற்கு பண உதவி அளிக்கும். சீனத் தொழிலாளிக்கு பரிபூரண பாதுகாப்பு அளிக்கப்பட்டிருக்கிறது.

சீனாவில் இதற்குமுன் தொழிலாளர்களுக்கு இத்தகைய நனமைகளும், பாதுகாப்பும் கிஞ்சித்தும் இருந்ததில்லை.

ஆனால் இந்தியத் தொழிலாளிகளின் நிலைமை என்ன? தொழிலாளிக்குப் பெரிய நனமைகள் செய்துவிடா விட்டாலும், அவர்களின் வாழ்க்கைக்குக்கூட சர்க்கார் உத்தரவாதம் அளிக்க மறுக்கிறது.

தன் சொந்த தொழிற் கோர்ட்டுகளின் தீர்ப்பைப் புறக்கணிக்கும் முதலாளிகளைக்கூட சர்க்கார் ஒன்றும்செய்வதில்லை. நம்தொழிலாளிகளுக்கு வேலைக்கும், வாழ்க்கைக்கும் ஒரு உத்திரவாதமில்லை.

## சென்னை சர்க்கார் பஸ் போககுவரத்து ஊழல்

சில தினங்களுக்கு முன் "திறமையாக பஸ் ஓட்டும் டிரைவர்களுக்கு போனஸ்" வழங்குவது பற்றி நான் பத்திரிகைகளுக்கு ஒரு அறிக்கை விடுத்தேன். அதில் ட்ரான்ஸ்போர்ட் நிர்வாகத்தில் மலிந்து கிடக்கும் ஊழல் காரணமாக மககளும் (பிரயாணிகள்) ட்ரான்ஸ்போர்ட் தொழிலாளிகளும் பட்டுவரும் வருணிக்க முடியாத கஷ்டங்களை ஓரளவு சுருக்கமாக விளக்கியிருந்தேன். இன்று மேலும் சில அம்சங்களை மக்கள் கவனத்துக்குக் கொண்டு வர விரும்புகிறேன்.

மோட்டார் வாகனங்களின் 'பிரேக்' போன்ற பிரதான பாகங்கள் வருடத்தில் இரண்டு அல்லது மூன்று தடவை அதற்கென நியமிக்கப்பட்டுள்ள இன்ஸ்பெக்டர்களால் பரிசீலிக்கப்பட்டு சர்டிபை செய்யப்பட வேண்டுமென்ற சட்டம் ஒன்று உண்டு. சர்க்காரால் நடத்தப்படும் பஸ்களும் இந்த சட்டத்துக்குட்பட்டதே. சர்க்கார் பஸ்களும் அவ்வாறு பரிசீலனைக்குட்படுத்தப்பட்டே வருகின்றன. ஆனால், பிரைவேட் பஸ்—லாரி சொந்தக்காரர்களுக்கும், சர்க்கார் பஸ் ட்ரான்ஸ்போர்ட் நிர்வாகத்துக்குமிடையே காட்டப்படும் பாரபட்சத்தைத்தான் இங்கு கவனிக்க வேண்டும். சர்க்கார் மோட்டார் வாகனங்கள்,குறிப்பாக நகரத்தில் ஓடும் பஸ்கள் அநேகமாக பரிசிலனைக்குட்படாமலே "நல்ல கண்டிஷனில்" இருப்பதாக அவை சர்டிபை செய்யப்படுகின்றன,இதன் விளைவாகத்தான் விபத்துக்கள் ஏற்படுகின்றன. பழி நிரபராதிகளான டிரைவர்கள் மீது சுமத்தப்படுகிறது. மக்களின் ஆத்திரம் தொழிலாளிகள் மீது திருப்பி விடப்படுகிறது.

2. இரண்டாவதாக, ஒரு திடுக்கிடத் தக்க நடைமுறையை சர்க்கார் பஸ்போக்குவரத்தின் நிர்வாகம் கடைப்பிடிக்கிறது. அது பிரிட்டிஷ் ஏகாதிபததியம் நம் நாட்டை பிரித்து ஆளுவதற்குக் கையாண்ட முறையாகும். நம் நாட்டில் உள்ள சாதாரண போலீஸ்காரர்கள் மாதத்தில் குறிப்பிட்ட எண்ணிக்கையில் "குற்றவாளிகளைக்"க் கொணடு வர வேண்டுமென்று நிர்ப்பந்திக்கப்பட்டு வருகிறார்கள் இன்னும் கூட. இதிலிருந்து ஆட்சியாளரே "குற்றவாளிகளை" பெற்றெடுத்துத் தண்டனைக்குள்ளாக்குகின்றனர். இந்தக் கொள்கை இன்று சென்னை சர்க்கார் பஸ் போக்குவரத்து நிர்வாகத்தால் மிகக் கடுமையாகக் கையாளப்பட்டு வருகிறது. இன்று பஸ் கண்டக்டர்கள் பெருவாரியானவர்கள் டெம்பரரிகள். புதிதாக வேலைக்கு சேர்த்துக் கொள்ளப்படுகிறவர்களும் டெம்பரரிகளே. சம்பளம் ரூ. 30; தினசரி படி 14 அ.; பஞ்சப்படி ரூ. 18 முதல் 21 வரை தான்: ரூ. 21 பெறுகிறவர்கள் வெகு சிலர் அல்லது எவருமில்லை யென்றும்கூட கூறலாம்.

வேலை நேரம் தினம் 8 மணி என்று கூறப்படுகிறது. ஆனால் நடைமுறையில் அது 10 முதல் 14 மணியாக வுள்ளது. இவ்வளவு தொல்லைகளும் போதாதென்று செக்கிங் இன்ஸ்பெக்டர்களுக்கும் கண்டக்டர்களுக்குமிடையே சண்டை மூட்டிவிடப் படுகிறது. ஒவ்வொரு செக்கிங் இன்ஸ்பெக்டரும் மாதம் குறைந்தது 5. ரிப்போர்ட்கள் கண்டக்டர்கள் பேரில் கொடுக்கவேண்டுமெனபது நிர்வாகத்தின் சட்டம். அவ்வாறு தொடர்ந்து சில மாதங்களுக்கு ரிப்போர்ட் கொண்டு வராத இன்ஸ்பெக்டரின் வேலைக்கு முடிவேற்படும். இதற்கு பயந்து கணடக்டர்கள் வெகு ஜாக்கிரதையாக இருக்க வேண்டி யிருக்கிறது. ஏதோ தவறி "ராங பஞ்ச" செய்துவிட்டால் அதுவும் வேலையை விட்டும், நீக்குவதற்கு அல்லது அபருதம் விதிப்பதற்குரிய தண்டனையைக் கொணடு வரும் குற்றங்களாகக் கருதப்படும். இதற்குப் பயந்தும், வேலை போய்விடக் கூடாதென்பதற்காகவும் கண்டக்டர்கள் ஒன்று லஞ்சம் கொடுத்துத் தப்பித்துக் கொள்ள வேணடும். இல்லையேல் விசாரணைக்குட்பட்டுக் குற்றவாளி என்ற பட்டம் பெற்று வேறு எங்கும் வேலை பெற முடியாத நிலைமைக்கு ஆளாகவேண்டும். நேர்மையாக நடக்கும் கண்டக்டர்களுக்கு நித்திய கண்டம்

(2-ம் பக்கம் பார்க்க)

பெண்: (உரத்த குரலில் அலற ஆரம்பிக்கிறது) ராயலசீமாவிலும், தாராபுரத்திலும் பட்டினியாலே ஜனங்க சாகுறபோது நம்ம ராஜாஜி இப்படி ரேஷனை எடுத்துடலாமா?

ஆண்: ஏன் அலறுகிறே அசடே! அதுக்கென்ன வாதிச்சு. நம்ம மந்திரிகள் ராமநாதபுரம் ராஜா, கபிவேஸ்வரம் ராஜா, பழனிசாமி கவுண்டர், சுப்ரமணியம், வெங்கிடசாமி நாயுடு இவங்கெல்லாம் அவுங்க எஸ்டேட்டிலே விளைஞ்ச தானியத்தை விலை உயர்த்தி விற்க முடியாமல் கஷ்டப்படுறாங்க. அப்படி இருக்கச்சே விலை கண்ட்ரோல் இன்னும் வேணுமிங்கிறயே.

(சர்க்கார் மாளிகை மீது பறந்து சென்று பெண் மேலும் உரத்த குரலில் அலற ஆரம்பித்தது).

Edited, Printed & Published by G. Alavandar, at Janasakthi Press, Subodaya Buildings, 38, Mount Rd, Madras 6. REGD. No. M. 5934